ஸ்ரீ







# திருக் காப்பு



ஸ்ரீ எம்பெருமானுர் தேவஸ்தானம்
ஆழ்வார்திருநகரி.

1961 விலை ந. பை. 25.

ஸ்ரீமதே சடகோபாய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீ கோதாயை நம:
ஸ்ரீமதே வரவர முநயே நம:

    

# திருக் காப்பு


நூலாசிரியர்:

**ஸ்ரீ. உ. வே. வி. கோ. ஸ்ரீனிவாசாசாரியார்**

தமிழ்ப் பேராசிரியர், இந்துமதப் பிரசாரகர்,
ஸ்ரீ விஷ்ணுசித்த ஸ்ரீவைஷ்ணவ சபைக் காரியதருசி,
23. 9/10 நாச்சியார் மேலமாட வீதி, ஸ்ரீவில்லிபுத்தூர்.



வெளியீடு:

**ஸ்ரீ எம்பெருமானார் தேவஸ்தானம்**
**ஆழ்வார்திருநகரி.**

1961 விலை ந. பை. 25.




## அட்டவணை



ரத்ந பிரஸ், ஸ்ரீவைகுண்டம்.

ஸ்ரீமதே சடகோபாய நம:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீ கோதாயை நம:
ஸ்ரீமதே வரவரமுநயே நம:

இந்நாவலந் தீவினில் செந்தமிழ் நாடுய்ய ஸர்வமங்களங்களையும் அடையுமாறு தாம்ரபர்ணி தீரத்துள்ள குருகூரின்கண் எக்காலத்தும் எழுந்தருளியுள்ள தேவபிரானும் ஆதிநாதன் பெருமையளவிடுஞ் சீர்மைத்தன்று. அங்நாடு சேதநோஜ்ஜீவனார்த்தமாக வேதந் தமிழ் செய்ய மாறனையும், வேதாங்கங்களைச் செந்தமிழிற் செய்ய மற்றைய ஆழ்வார்களையும், தமிழ் வேத வேதாங்கப் பொருளையுணர்த்த ஆசார்யர்களையும் அவதரிப்பித்தருளிற்று; என்றால் மிகையாகாது. என்னையெனின், தமிழ்வேதம் மங்கினகாலத்து நாதனுக்கு நாலாயிரமருளியது இந்நாடன்றோ! வளர்த்தவர் இராமாநுஜனன்றோ. அவர் தானத்துள்ள எம்பெருமானார்ஜீயர் ஸ்வாமியின் பெருமை யாரால் அளவிடமுடியும். யாவர்க்கும் எப்பொழுதும் காப்பாகிய திருவடித் திருமண் திருக்காப்பை மறந்து மயங்கும் இக்காலத்து மயங்காமற் பாது காப்பதும், வளர்ப்பதும் ஸ்வாமிக்குச் சொந்தமன்றோ? ஆதலால் அடியேன் இக்காப்புப் பதிகத்தை ஸ்வாமி சந்நிதியில் சமர்ப்பித்துள்ளேன்.

இங்ஙனம்,
**தொண்டர் தொண்டர் தொண்டன்,**
வி. கோ. ஸ்ரீநிவாசாசாரி.

தமிழ்ப் பேராசிரியர், இந்துமதப்பிரசாரகர், ஸ்ரீவில்லிபுத்தூர்
ஸ்ரீவிஷ்ணுசித்த ஸ்ரீ வைஷ்ணவ சபைக் காரியதருசி,
**23$\frac{9}{10}$ எண் நாச்சியார் மேலமாடவீதி,**
ஸ்ரீவில்லிபுத்தூர்.
**12—2—61.**

ஸ்ரீமதே சடகோபாய நம:
ஸ்ரீ மதே ராமாநுஜாய நம:
ஸ்ரீகோதாயை நம:
ஸ்ரீமதே வர வர முநயே நம:

திருமகிழ் மாறனார், பவிஷ்யத் ஆசார்யரான இராமாநுஜர், வரவரமுனி முதலிய மூவரும் பிரசன்னமான முப்புரியூட்டிய திவ்ய தேசமென்று புகழமைந்த ஆதிக்ஷேத்திராதிபதியான ஸ்ரீபூ சமேத ஆதிநாதப் பெருமாள் திருவுள்ளத்திற்கு உகப்பாய் எழுந்தருளிய ஆழ்வார்திருநகரி ஸ்ரீமத் பரமஹம்ஸ, பரிவ்ராஜக பரமாசாரியாரான 35 வது பட்டத்து ஸ்ரீ எம்பெருமானார் ஜீயர் சுவாமிகள் அருளிச்செய்த ஸ்ரீ வசனச் சிறப்புப் பாயிரம்.

இப்பதிகம் பிறந்த திவ்விய தேசமும் முப்புரியூட்டப்பெற்ற ஸ்ரீவில்லிபுத்தூரேயாம். இப்பதிகத்து முதன் மூன்று பாசுரங்களும் முப்புரியூட்டிய பிரணவப் பொருள்போலிருப்பதும், முதற் பாசுரம் முப்புரியூட்டப் பெற்றமையை விளக்கப் பெரிய பெருமாளையும், பெரியாழ்வாரையும், ஸ்ரீஆண்டாளையும் கூறியிருப்பது மிக மிக இன்புறத்தக்கது. இவைபோன்ற பலவிஷயங்களை வெளியிடும் ஊர்த்துவ புண்டிரப்பெருமை நோக்கி முன்பு இத்தலம் நாதனுக்கு நாலாயிரமும் மங்காது வாழ அனுக்கிரகித்தது போலத் திருமண்காப்பு மங்காதிருக்குமாறு ஆழ்வார் திருவுள்ளம் பற்றினாரென்றே ஆசி கூறுகிறோம். யாவரும் திருக்காப்பைப் படித்து ஊர்த்துவ புண்டிரமணிந்து இருமைப் பயனும் எய்துவாராக. இப்பதிகத்தைப் பாடிய ஸ்வாமியும் இதுபோன்ற கைங்கரியங்களைச் செய்து பல்லாண்டு பல்லாண்டு வாழ ஆதிநாதன், ஆழ்வார், இராமாநுஜன், வரவர முனி முதலியோர் பொன்னடித் தாமரைகளைப் போற்றுவோம்.

ஆழ்வார்திருநகரி
14—2—61

எம்பெருமானார்ஜீயர் ஸ்வாமிகள்,
பரம்பரை டிரஸ்டி
எம்பெருமானார் தேவஸ்தானம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:
ஸ்ரீகோதாயை நம:
ஸ்ரீமதே வரவரமுநயே நம:
ஸ்ரீமதே பராங்குசமுநயே நம:

# திருக்காப்பு



## முகவுரை:

அடியேன் இதற்கு முகவுரை யெழுத முக்கியம் என்னையெனின் ஒன்று, ஒருநாள் அடியேன் உறங்கும்பொழுது "ஆலிலைப் பள்ளியான் அழைக்கிருர், வா" என ஒரு சந்யாசி அழைக்க அடியேனும் அவர் பின்னேபோய்ப் பெரிய பெருமாளை அவர் சந்நிதியில் அவர் சேவிக்க அடியேனும் சேவித்தேன். அப்பொழுது எம்பெருமான் சைவத்தை நிலைநாட்டத் திருஞானசம்பந்தனுல் அறுசீர்க்கழிநெடிலாசிரிய விருத்தமாய் அமங்கலச் சொல்லாலே ஆலவாயான் திருநீற்றுப் பதிகமெனப்பாடப்பட்டுள்ளது. நீ நமது பெரியாழ்வாராலே என் சேவடி செவ்வி திருக்காப்பு என்றைக்குமென நிலைநாட்டப்பட்டதும், நித்தியமும், உண்மையுமான வைஷ்ணவ மதத்தைத் திருமந்திரம் தேர்வில்லித் திருநகரசலிலைத் திருப்பள்ளி யானடித் திருமண் திருக்காப்பே என யாவரையும், எப்பொழுதும் காப்பாற்றும் நமது திருவடியையும், திருவடிபோன்ற திருமண் திருக்காப்பையும் யாவரும் எண்ணும்படியான சீரோடு எண்சீர்க்கழிநெடிலாசிரிய விருத்தத்தில் அப் பொருள் வரவும் பதிகம் பாடுக.

ணர் என, அடியேன் பரமாசாரியனைப் பார்க்க அவர் அடியேனை ஆசீர்வதிக்க அப்பெருமான் மீது அகார உகார மகாரப் பொருளுந்துமாறும் ஸ்ரீவில்லிபுத்தூர்த் தலபுராணத்துக் கூறுமாறு முள்ளதுமானஎம்பெருமான், ஆண்டாள்பெரியாழ் வாரைக் குறிக்குமாறுமுள்ளதும் யாவரும் எண் ணுஞ்சிறப்போடு எண்சீர்க்கழிநெடிலாசிரியவிருத் தத்தில் பாடியும் பரமாசாரியன்மீது யாவரும்அவ ரது குணங்களைப் பன்னுமாறு பன்னிரு சீர்க்கழி நெடிலாசிரியவிருத்தத்தில் பாடியும், மகாரவாச்சிய ஞன அடியேனையும் யாவரும் நேர்மையான இசை யோடு ஆசீர்வதிக்க நேரிசை வெண்பாவில் பாடி யும் பின் முற்கூறிய எம்பெருமான் திருவுளப்படி ஆசாரிய கிருபையால் ஆலிலைப் பள்ளியான் திரு வடித் திருமண் திருக்காப்புப் பதிகத்தைப் பாடி னேன். விழிப்படைந்தேன். பின்னர் கூறப்படும் காரணங்களால் இரண்டு வசனங்களையும் அவ் விருவர் அனுக்கிரகத்தாலும், பல நூலாராய்ச்சி யாலும் கூறினேன் குணமே கொள்க.

முன்பு பலப்பல திவ்ய தேசங்களிலெல்லாம் இக்காப்பின் பெருமையுணர்ந்தாரும், உணர்த்து வாரும் நிறைய அணிந்து சேவை தந்தனர். அப்படிப்பட்ட இது மிகவும் குன்றிவரு வதாலும், பன்னிரு நாமம் அணிவோரும் முறை யின்றி அப்பிரமாணமாய் அணிவதாலும் இதன் பெருமையை அடியேன் அறிந்தவாறு எழுத லானேன். திருமண் திருக்காப்பு, தலைவன் எஜமானன் என்றவற்றைக் காட்டும் அடையாள

மன்று. எம்பெருமானுக்கும், அவனது அடியார்களுக்கும் மனமொழி மெய்களால் தொண்டு செய்பவன் என்றதைக் காட்டும் அடையாளமாம். ஆனதுபற்றியே திருமண் திருக்காப்புப் பதிகத்தில் எண்டிசைக் கொடியணி திருமண் திருக்காப்பென்றும், உபய விபூதியையு முடைமையால் உடையவரென்று திருநாமம் பெற்ற இராமானுஜ ஞகிய எதிராஜன் வளர்த்தது திருமண் திருக்காப்பென்றும் கூறினேன். இதனைப் பெரியாழ்வார் பவனி வரும்போது பெரியபெருமாள் அவருக்கு அவருடைய திருப்பல்லாண்டின் முதற்பாசுரத்திலேயே தொண்டர் தொண்டன் என்ற அடையாளத்தைக் காட்டுவது சேவடி செவ்வி திருக்காப்பு என்று திருமண் திருக் காப்பையுணர்த்தின பெருமையும் இதையே உணர்த்தும்; என்ருலும் ஸ்ரீவைஷ்ணவ சமூகம் மாத்துவர்களாகவும், திருமண் காப்பு அணிபவர்களாகவும் பிரிந்தது; பிரிந்த திருமண் காப்பணிபவர்களும் தென்னுரியர், வடவாரியர் என்றுபிரிந்து தென்கலையார், வடகலையார் என்று அழைக்கப்பட்டனர். அவருள் தென்கலையாரைப் பற்றியே ஈண்டுக் கூறுவாம்.

அவர்கள் அணியும் பன்னிரு நாமங்களும் ஆசார்ய சிக்ஷையில்லாது ஸமாச்சிரயண காலத்தும் முறை பூர்ணமாய்த் தெரிவிப்பாரும், தெரிய விரும்புவாரும் இல்லாமற் போயின; ஆதலால் மேலேயிருந்து கீழுள்ளவர்வரை நியதியில்லாமற் போய்விட்டது. நியதமும் அத்தாணிச் சேவகம் பெற்றுள்ள அர்ச்சகபரிசாரர்களும் பெரும்பாலும் பன்னிரு நாமத்தோடு வருபவரிலரென்றே சொல்ல

லாம். ஆசாரிய புருஷர்களும் பெரும்பாலுமப்ப டியே. காரணம் நமது சரீரத்தின் அமைப்பும், அங்கே பகவான் பலபெயர்களோடும், லக்ஷ்மீ சக்தி யோடும், சரீர அமைப்பிலுள்ள பல ஆயுதங்களோ டும் நமது சரீரத்தை நடத்துவதை நன்கு அறியா மற்போனதேயாம். நமது சரீரம் பகவானது கோயில் என்பதை யுணர்ந்தவர் வேறு புறக் கோயிலையும் பக்தியோடு பேணுவார். நம்மில் வேறான சிவத்துவிஜாள், குருக்கள், ஓதுவாமூர்த்தி கள், மாத்துவர்களும் புண்டிர தாரணத்தைப் பக்தியோடு அவரவர் சமயக் கோட்பாடுகளின்படி அணியவேண்டிய இடங்கள் ஒன்றும் குறையாமல் அணிகிறார்களே. அவர்களுக்கு வருவாய்க்குங் குறைவில்லையே. எவ்வகையிலும் மேலான நாம் அவர்களைப் போலாவது அவசியம் அத்தாணிச் சேவகம் பெற்ற அர்ச்சகபரிசாரர்களும், ஆசார்ய புருஷர்களும் பன்னிரு நாமத்தோடு சேவை சாதித்து உலகைத் திருத்த வேண்டுமாய்க் கேட் டுக் கொண்டும், அறநிலையப் பாதுகாப்பதிகாரி களும் இவர்களை 12 நாமங்கள் அணிந்தே கைங் கரியஞ் செய்யுமாறு உத்திரவிடுமாறுங் கூறியே இம்முகவுரையை முடிக்கிறேன்.

இங்ஙனம்,

தொண்டர் தொண்டன்.

# திருமண் திருக்காப்புப் பதிகம் சாற்றுக்கவிகள்

மதுரை ஸௌராஷ்டிர ஹைஸ்கூல்
தலைமைத் தமிழ் ஆசிரியர்

வித்வான் ஸ்ரீ. உ. வே. ரெ. இராமய்யங்கார் ஸ்வாமியின்

**சாற்றுக்கவி**

அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

திருமண் காப்புத் திருப்பதிகம்
தேனும் பாலுமெனத் திதிப்ப
அரிய பலநூற் கருத்துடனே
ஆன்றோர் கருத்துக்களும் உலகோர்
தெரிய வெடுத்துத் தொகுத்துரைத்தான்
தேவர் போற்றும் வில்லிநகர்
வருசீர் விஞ்சைக் கோஸ்ரீநி
வாச னெனுநூல் வல்லோனே.

---

மதுரை ஸெண்டு ஜோஸப் மெட்ரிக் ஹைஸ்கூல்
தலைமைத் தமிழாசிரியர்

வித்வான் ஸ்ரீ உ. வே. ஆழ்வார் ஐயங்கார் ஸ்வாமியின்

**சாற்றுக்கவிகள்.**

அறுசீர்க் கழிநெடிலாசிரிய விருத்தம்

1 திருமண் திருமா மணிவடங்கள் திகழ்மா மேனிப்
பொலிவுடையார்
பெருமை மிகுநல் ஆழ்வார்கள் பிரபந்தங் களேநுவல்
நாவார்
ஒருமை மனத்தி னுயர்திருமால் ஒளிரும் பதமே
யுணரறிவார்
அருமைச் சீனி வாசப்பேர் அமைந்த பெரியோர்
அறிவாளர்

## நேரிசை வெண்பா.

2 தீர்த்தகரா மன்னூர் திருமண்காப் புப்பதிகம்
ஆர்த்தியுடன் வாய்மலர்ந்த அவ்வழகை–நேர்த்தியுடன்
எம்மாற் புகலரிதே இப்புவியில் நீடுழி
செம்மாந்து வாழியவர் தேர்ந்து

சுபம் முற்றிற்று சுபம்.

---

## பெரிய பெருமாள் பெருமை

### எண் சீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

ஆரா தனைக்குரியான் அரவிந்த லோசனன்
அனைத்துலகும் வயிற்றடக்கி அன்னையாய்க் காப்பவன்
தீராத புகழ்வில்லித் திருநகர் வாழவே
திரேதைக்கண் ஆலிலையில் திருப்பள்ளி கொண்டவன்
பேரா யிரமுடையான் உலகுண்ட பெருவாயான்
பிரமனரன் காணுதான் பெரியாழ்வார் கண்ணுளான்
வாரார்பூண் முலையாள் சூடிய வாடலை
வான்முடியிற் கொண்டவன் வைகுந்த நாட்டவனே.

## பரமாசாரியன் பெருமை

### பன்னிரு சீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

ஓங்காரத் துட்பொருளான் ஒளிபுத்தூ ராலிலையில்
உயரரா ஓங்குமணைப் பள்ளியான் ஒண்சேவடிச்
செவ்வியாம் ஒளிவளர் திருமண் திருக்காப்பைப்

பாங்காகச் செந்தமிழிற் பதிகமாப் பண்டிதரும்
பாமரரும் பரிந்தும் அறிந்தும் பொருள்கொளச்
செய்வித்தும் பரமபத மடையுமா பாலித்தும்
தாங்காத லுற்ற தாசரதி தம்பிதாள் தலைக்கொண்டு
தானுண்ட சாறெலாஞ் சாரமா இருவழித் தந்தவன்

## தயாநிதி ஆனவன்

ஆங்கார மற்ற அருளாளி மாமுனி
அருளிச்செய லறிந்தார் அரும்பொருள் தெளிந்தார்
அரங்கன் பொன்னடி அடைந்தார் தாமே.

## நூலாசிரியர் பெருமை

### நேரிசை வெண்பா

அம்முனிவன் பொன்னடிச்சீர் அன்னமா உண்டவன்
மும்முனிவர் பொன்னடிச்சீர் முன்னுவான்—நம்முனிவாழ்
வில்லிநகர் வாழும் விகோ ஸ்ரீநி-வாசனே
நல்லியற்பாச் செய்திட்டான் நன்கு.

### எண்சீர்க்கழி நெடிலாசிரிய விருத்தம்

திருமந்திரம் தேர்ந்தது திருமண் திருக்காப்புத்
திருமா லுறைவிடம் திருமண் திருக்காப்புத்
திருமந்திரத் திருமணி திருமண் திருக்காப்புத் X
X திருமந்திரத் தான்சரண் திருமண் திருக்காப்புத்
திருமணி வண்ணனருள் திருமண் திருக்காப்புத்
திருமந்திரம் தேர்வில்லித் திருநக ராலிலைத்
திருப்பள்ளி யானடித் திருமண் திருக்காப்பே.

2. திருமறை தேர்வது திருமண் திருக்காப்புத்
தேசிகன் அருண்மொழி திருமண் திருக்காப்புத்
திருவினைத் தருவது திருமண் திருக்காப்புத்
திருமழிசை யானணி திருமண் திருக்காப்புக்
குருகைமன் அணிவது திருமண் திருக்காப்புக்
குலசேகரன் அணிவது திருமண் திருக்காப்புத்
திருவளர் திருவில்லித் திருநக ராலிலைத்
திருப்பள்ளி யானடித் திருமண் திருக்காப்பே.

3. முத்தி தருவது திருமண் திருக்காப்பு
மூவர்கள் அணிவது திருமண் திருக்காப்புச்
சுத்தி தருவது திருமண் திருக்காப்புச்
சுகமுனி அணிவது திருமண் திருக்காப்புப்

X திருமக ஒற்றைநியம் திருமண் திருக்காப்புத்

பத்தி தருவது திருமண் திருக்காப்புப்
பராசரன் அணிவது திருமண் திருக்காப்புச்
சித்தர்கள் வாழ்வில்லித் திருநகர் ஆலிலைத்
திருப்பள்ளி யானடித் திருமண் திருக்காப்பே.

4. காண இனியது திருமண் திருக்காப்புக்
கௌசிகன் அணிவது திருமண் திருக்காப்புப்
பாணன் அணிவது திருமண் திருக்காப்புப்
பட்டர் பிரானணி திருமண் திருக்காப்பு
வாணனைக் காத்தது திருமண் திருக்காப்பு
வசிட்டர் அணிவது திருமண் திருக்காப்புச்
சேணுளோர் புகழ்வில்லித் திருநகர் ஆலிலைத்
திருப்பள்ளி யானடித் திருமண் திருக்காப்பே.

5. பூஜைக் குரியது திருமண் திருக்காப்புப்
புலத்தியர் அணிவது திருமண் திருக்காப்பு
வாசவன் அணிவது திருமண் திருக்காப்பு
வான்மீகி அணிவது திருமண் திருக்காப்புப்
பாசம் அறுப்பது திருமண் திருக்காப்புப்
பரகாலன் அணிவது திருமண் திருக்காப்புத்
தேசுளோர் புகழ்வில்லித் திருநகர் ஆலிலைத்
திருப்பள்ளி யானடித் திருமண் திருக்காப்பே.

6. அருத்தம் அளிப்பது திருமண் திருக்காப்பு
அரனயன் அணிவது திருமண் திருக்காப்பு
வருத்தம் ஒழிப்பது திருமண் திருக்காப்பு
வள்ளுவர் வாழ்த்தணி திருமண் திருக்காப்புக்
கருத்தைக் கவர்வது திருமண் திருக்காப்புக்
கடமுனி அணிவது திருமண் திருக்காப்புத்
திருத்தகு மாளிகை சூழ்வில்லி ஆலிலைத்
திருப்பள்ளி யானடித் திருமண் திருக்காப்பே.

7. எயிலெனக் காப்பது திருமண் திருக்காப்பு
எம்மையும் அளிப்பது திருமண் திருக்காப்பு
மயிலினன் அணிவது திருமண் திருக்காப்பு
மார்க்கண்டன் அணிவது திருமண் திருக்காப்புத்

துயிலினை ஒழிப்பது திருமண் திருக்காப்புத்
துருவன் பதம் பெற்றது திருமண் திருக்காப்புச்
செயிரறு புகழ்வில்லித் திருநகர் ஆலிலைத்
திருப்பள்ளி யானடித் திருமண் திருக்காப்பே.

8. இராமன் அணிந்தது திருமண் திருக்காப்பு
இளையவர்க் கீந்தது திருமண் திருக்காப்பு
விராட்பரன் அணிவது திருமண் திருக்காப்பு
வீடணற் களித்தது திருமண் திருக்காப்பு
விராதனைக் காத்தது திருமண் திருக்காப்பு
வியாசர் அணிவது திருமண் திருக்காப்புச்
சிராதல மாம்வில்லித் திருநகர் ஆலிலைத்
திருப்பள்ளி யானடித் திருமண் திருக்காப்பே.

9. நெற்றிக்கு அணிகலன் திருமண் திருக்காப்பு
நிலமகள் அணிவது திருமண் திருக்காப்பு
வெற்றியைத் தருவது திருமண் திருக்காப்பு
விநாயக ரணிவது திருமண் திருக்காப்புப்
பற்றினை ஒழிப்பது திருமண் திருக்காப்புப்
பாண்டவர்க் காத்தது திருமண் திருக்காப்புத்
தெற்றி நிறைவில்லித் திருநகர் ஆலிலைத்
திருப்பள்ளி யானடித் திருமண் திருக்காப்பே.

10. குண்டிகைக் கையர்கள் சாக்கியர் கூட்டங்கள்
கூடா ஒழுக்கமே கொண்ட பேர்க்கும்
கண்திகைப் பிப்பது திருமண் திருக்காப்புக்
கண்டகனன் பெற்றது திருமண் திருக்காப்பு
எண்டிசைக் கொடியணி திருமண் திருக்காப்பு
எதிராசன் வளர்த்தது திருமண் திருக்காப்புத்
திண்டிறல் சேர்வில்லித் திருநகர் ஆலிலைத்
திருப்பள்ளி யானடித் திருமண் திருக்காப்பே.

சுபம் முற்றிற்று சுபம்

---

# திருமண் திருக்காப்பு

## வசனம்

அறிவிற்பெரியீர்? ஊர்த்துவபுண்ட்ரமேவேதியர்க்குரியது. இதன் பொருள் மேல்நோக்கி அணியுங் குறி என்பதாம். இந்தப் புண்ட்ரத்தைத்தான் அவ்வேதியர்களணிந்துகொள்வதற்கு விதியுண்டென்பதற்கும், நீறணிந்துகொள்வது அவர்கட்குப் பொருந்தாத செயலென்பதற்கும், இது சூத்திரர் முதலானவர்கட்கே இயைந்த ஆசாரமென்பதற்கும் வேதசாஸ்திரப் பிரமாணங்களை ஈண்டு விரித்துரைப்பேன்; கேட்பீராக. – விளங்குகின்ற ஊர்த்துவபுண்ட்ரந்தன்னைப் போற்றி, 'உன்னை இனிதாக அணிகின்றேன்; நீ எனக்குப் பாதுகாவலாகவிருந்து அநுக்ரஹிக்க வேண்டும்' என்று அணிகின்றவர்கட்கு அது பாதுகாவலாகவிருக்குமென்று இந்த ஊர்த்துவபுண்ட்ரத்தின் பெருமையை எசுர்வேதத்தில் ஆறும் பருச்நத்தில் முதலநுவாகம் எடுத்தோதும்.

உலகத்தில் ஊர்த்துவபுண்ட்ரத்தை ஆதரவுடன் தரிப்பவரை ஸர்வகாரணனான நாரணனே எவ்வகைத் துன்பமும் வந்தணுகாதபடி பாதுகாப்பானென்று ருக்குவேதம் உரையாநிற்கும்.

ஸ்ரீய:பதியின் இணையடிபோல மிகவும் திருத்தமாக இடைவெளியிட்டு ஊர்த்துவபுண்ட்ரமணிபவரைத் திருமால் திருவுள்ளமுவந்தாதரித்து அவரிடத்திலுள்ள பாதகமெல்லாம் தொலைத்து வீடுபேற்றைத் தந்து பரமாநந்தமுறும்படி செய்

வானென்று வேதாந்தம் முப்பத்திரண்டினுள் கடவல்லி கூறுநிற்கும்.

சிறந்த ஊர்த்துவபுண்ட்ரத்தை விதிப்படி அணிந்துகொண்டு வேள்விவடிவாகிய நாராயணனை அன்புடன் ஆராதனை செய்வார் எவரோ? அவர் தம் குலத்துளோரை ஏழு தலைமுறையளவும் மனத்தாலும், வாக்காலும் சூழ்கின்ற கொடிய பாவவினையைப் பற்றறுத்துப் பரகதியை அடைவிப்பார். அந்தணர்கள் அன்னிய தேவதைகளிடத்திற் பக்தியுடையவர்களாயிருந்தாலும், அவரனைவர்க்கும் மகிமையுடைய ஊர்த்துவபுண்ட்ரத்தை அணிந்துகொள்வதுதான் விதியாமென்று எசுச்சாகை யுரைத்தது. இஃதன்றி மஹோபநிடதமும் ஊர்த்துவபுண்ட்ரச் சிறப்பை இனிதெடுத்தியம்பியது.

பிராம்மணருக்கும், க்ஷத்திரியருக்கும் புண்ட்ரமும், வணிக குலத்தவருக்குச் சந்திர ரேகையும், பிர்ம்மசாரிக்குச் சந்தனமும், சங்யாஸிக்கு வெண்ணீறும் தரித்துக்கொள்வது எக்காலத்தும் பாதுகாவலாகாதென்று தாபனியோபநிடதம் கூறுநிற்கும்.

இதுவரை ஊர்த்துவபுண்ட்ரத்திற்கு வேத வேதாந்தங்களிலிருந்து பிரமாணங்கள் எடுத்தியம்பினேன். அந்தப் பிரமாணங்கட்கேற்பப் புராணம், சங்கிதை முதலிய நூல்களிலும் பல பிரமாணங்களுள்ளன. அவற்றையும் எடுத்துரைப்பேன் கேட்பீராக:—

பரந்த புகழினையுடைய நாரதபகவானை வேத வியாசர் நோக்கி, 'அண்ணலே! சிறந்த ஊர்த்துவ புண்ட்ரத்தின் விதியும், அதனை யணிந்துகொள்ளு மிடங்களும், மந்திரங்களும், ஆதிதேவதையும், ஆசரிக்கு முறையும், தியானமும் என்ற இவை யெல்லாம் விவரமாக அருளிச்செய்யவேண்டும்' என்று வேண்டினர். அப்பொழுது நாரதபகவான் வேதங்களைக் கரைகண்ட வேதவியாசரை நோக்கி யுரைக்கத்தொடங்கினர்.

மறைமுனிவரே! *பத்மாகாரம் ‡கூர்மாகாரம் சங்காகாரம் †அச்வத்த பத்திராகாரம் §வேணு பத்திராகாரம் தீபாகாரம் %திந்திருணிபுஷ்பா காரம் ○துந்தூரபுஷ்பாகாரம் +சூர்ப்பாகாரம் ×சூலாகாரம் ⁝மத்ஸ்யாகாரம் ¶திருமால் சரணு காரம் முதலிய வடிவினையுடையதாய் ஊர்த்துவ புண்ட்ரம் அணிந்துகொள்ளத்தக்கது. இந்தப் புண்ட்ரமும் அந்தணர்க்கே உரியதாம். ஏனைய நான்காம் வருணத்தவருக்கும் °பதிதருக்கும் குறுக்கிடும் புண்ட்ரமாகிய திரியக்குப்புண்ட்ரமே

* பத்மாகாரம் – தாமரைபோன்ற வடிவு.

‡ கூர்மாகாரம் – ஆமைபோன்ற வடிவு.

† அச்வத்தபத்திராகாரம் – அரசிலைபோன்ற வடிவு.

§ வேணுபத்திராகாரம் – மூங்கிலிலைபோன்ற வடிவு.

% திந்திருணி புஷ்பாகாரம்–புளியம்பூப் போன்ற வடிவு.

○ துந்தூர புஷ்பாகாரம் – ஊமத்தப்பூப்போலணிவது.

\+ சூர்ப்பாகாரம் – சுளகைப்போலணிவது.

× சூலாகாரம் – சூலாயுதம்போலணிவது.

⁝ மத்ஸ்யாகாரம் – மீன்வடிவாயணிவது.

¶ திருமால் சரணுகாரம் – செங்கண்மாலின் திருவடிவு போன்ற வடிவு.

° பதிதர் – கீழ்க்குலத்தினர்.

உரியதாகும். எக்குலத்திற் பிறந்தாரேனும் திரு மாலிடத்தில் அன்புடையராயிருப்பார்க்கெல்லாம் ஊர்த்துவபுண்ட்ர மணிந்துகொள்வதே விதியாம்.

இஃதல்லாமலும், பிராம்மணர்கட்குத் திரு மண்ணும், க்ஷத்திரியர்கட்குச் சந்தனமும், வைசி யருக்கு வில்வவேரும், சூத்திரருக்கு வெண்ணீறும் தரித்துக்கொள்வது முறையாம். திருமண்ணையும், சந்தனத்தையுங்கொண்டு திலகமிடலாகாது. வில்வவேரும்,வெண்ணீறும் வைசியருக்கும்,சூத்தி ரருக்குமொழிய, இவற்றைப் பிராம்மணரும், க்ஷத் திரியருமணிந்து கொள்ளலாகாது. திருமண் ணிற்கு நிறபேதங்கள் ஐந்துள. அவை: பொன்மை வெண்மை, கருமை, செம்மை, பசுமை என்பன இந்த நிறங்களுள் வெண்மை நிறமுடையதே சிறந்ததாகும். இந்தத் திருமண்ணை எம்பெருமான் உகந்தருளிய திவ்ய தேசங்களிலும், கங்கை முத லிய புண்ணிய நதிக்கரைகளிலும், திருத்துழாய் முளைத்திருக்குமிடங்களிலும் எடுப்பது விசேஷ மாகும்.

* * * * * *

இந்தத் திருமண்ணைப் பதின்மூன்று இடத்தி லாவது, பன்னிரண்டிடத்திலாவது, எட்டிடத்தி லாவது, ஆறிடத்திலாவது, நான்கிடத்திலாவது, ஓரிடத்திலாவது தரித்துக்கொள்ள வேண்டும். நெற்றி, வயிறு, மார்பு, கழுத்து, வலதுபக்கம் உந்தி, வலதுதோள், வலதுபக்கக் கழுத்து, இடப் பாலுந்தி, இடது தோள், இடப்பாற் கழுத்து, முதுகின் கீழிடம், பிடரி, சிரசு என்ற பதின்மூன் றும் திருநாமங்களைத் தரித்துக்கொள்வதற்குரிய

விடங்களாம். இவற்றுள் சிரம் நீங்கிய பன்னிரண்டிடங்களிலும் பன்னிரு திருநாமங்களை யணிந்துகொள்ளவேண்டும். இந்தப் பன்னிரண்டிடங்களில் பிடரியும், கழுத்தும, தோள்களிரண்டும் நீக்கி ஏனைய எட்டும், எட்டுத் திருநாமங்களைத் தரித்துக்கொள்வதற்குரிய விடங்களாம். ஆறு திருநாமங்களை நெற்றியிலும், கழுத்தினிருபுறத்திலும், மார்பிலும், தோள்களிரண்டிலு மணிந்துகொள்ளலாகும். நெற்றியும், தோள்களிரண்டும், மார்பும் என்ற நான்கிடங்களும், நான்கு திருநாமங்களை யணிந்துகொள்ளுதற்குரியன. நெற்றி ஒன்றே ஒரு திருநாமம் தரித்தற்குரிய ஸ்தானமாம்.

பதின்மூன்று புண்ட்ரங்களிடுமிடத்து அவற்றுக்குக் *கேசவன் முதல் வாசுதேவனீருகவுள்ள பதின்மூன்றும் மந்திரங்களாம். பன்னிரு நாமத்திற்குக் கேசவன் முதல் தாமோதரனீருகவுள்ள பன்னிரண்டும் மந்திரங்களாம். எட்டுப் புண்ட்ரங்களணிந்துகொள்ளுமிடத்துத் திருவஷ்டாக்ஷரமே மந்திரமாம். கேசவன் முதல் மதுசூதனனிறுதியாகவுள்ள ஆறு மந்திரங்களும் ஆறு திருநாமத்திற்குரியனவாம். நான்கு புண்ட்ரத்திற்குக் கேசவன்' அச்சுதன், அனந்தன், கோவிந்தன் என்ற நான்கும் மந்திரங்களாம். ஒரு திருநாமத்திற்குக் கேசவ மந்திரம் ஒன்றேயாம்.

---

* கேசவாய நம; நாராயணுய நம; மாதவாய நம; கோவிந்தாய நம; விஷ்ணவே நம; மதுசூதனுய நம; திரிவிக்ரமாய நம; வாமனாய நம; ஸ்ரீதராய நம; ருஷிகேசாய நம; பத்மநாபாய நம; தாமோதராய நம; வாசுதேவாய நம; என்ற இவை பதின்மூன்று மந்திரங்களாம்.

பெருவிரலால் திருமணிட்டால் பொருளுண்டாகும். அநாமிகையால் (ஆழிவிரலால்) இட்டால் புத்திரப்பேறுண்டாகும். கனிட்டிகையால் (சுண்டு விரலால்) இட்டால் ஆயுளுண்டாகும். தர்ச்சினியினுல் (ஆட்காட்டி விரலினுல்) இட்டால் முத்தி சித்திக்கும். நடு விரலினுல் புண்ட்ரமணியலாகாது.

எந்த நாமத்தால் புண்ட்ரமணிய விதித்துளதோ? அந்த நாமத்திற்குரிய பொருளே தியானிக்கப்படும் மூர்த்தியாம். இந்த ஊர்த்துவ புண்ட்ரத்தைத் தரித்து ஸ்ரீமந் நாராயணனை மனக்களிப்புடன் ஆராதனை செய்வார், அறிவிற் சிறந்த பாகவதராவார். இவர்கள் தவருது பரமபதமடைந்தின்புறுவார்கள்.

முனிவரரே! இந்த ரஹஸ்யப் பொருளெல்லாம் உமக்கிப்பொழுது விரித்துரைத்தேன். இவ்விவரம நாரதீய புராணத்தில் அறுபத்தொன்பதாம் அத்யாயத்திற் சொல்லப்பட்டுளது.

அறிவிற் பெரியீர்! மேலும், ஸ்ரீமந் நாராயணன் நான்முகனை நோக்கி, "யான் மகிழுமாறு எவர்கள் ஊர்த்துவ புண்ட்ரந்தரிப்பார்களோ? அவர்கள் முத்தராவார்கள்" என்று கூறினுன். நான்முகன் முனிவர்களை நோக்கி, ஊர்த்துவ புண்ட்ரமணியாமற் செய்யுஞ் சிறந்த அனுஷ்டானங்களெல்லாம் பயனற்றனவாயொழியும்" என்று கூறினுன். சிவன், பார்வதியை நோக்கி, 'பரமபாவன (பரிசுத்த)மாக ஊர்த்துவபுண்ட்ரந் தரிப்பவர்கள் பரமபதமடைவார்கள்' என்றிசைத்

தான். இந்திரன் ஊர்த்துவ புண்ட்ரத்தின் மகிமையைத் தேவர்கட்குபதேசித்தான். அக்கினி தேவன், ஊர்த்துவபுண்ட்ரத்தின் பெருமையைப் பிதுர்தேவதைகட்கெடுத்தியம்பினன். தேவர்கள், முனிவர்கள், தென்புலத்தார்கள் என்ற இவர்களெல்லாரும் தம்மைச் சார்ந்தார் அனைவருக்கும் ஊர்த்துவபுண்ட்ரத்தின் சிறப்பை விளங்கக் கூறினுர்கள். சொர்க்க மத்திய பாதாள முதலான உலகின்கண் வாழ்பவரனைவரும் ஊர்த்துவ புண்ட்ரதாரிகளாய் விளங்கினுர்கள்; என்று அந்த நாரதீய புராணத்திலுள்ள எழுபத்தைந்தா மத்தியாயம் இனிதெடுத்தியம்பியது.

ஊர்த்துவபுண்ட்ரத்தை நெற்றியில் இடைவெளியிட்டு அணியாதவனும், திரிபுண்ட்ரத்தைத் தரிப்பவனும் சூத்திரனுக்கொப்பாவானென்றும், தலையில் ஓடும், எலும்பும், சங்குமணியும், சடையும் தரித்து, நெற்றியில் நீறணிந்திடுவார் அதமராவரென்றும்,பிராம்மணர்களாய்ப்பிறந்தும் சரீரத்தில் லிங்கத்தைத் தரித்து, விபூதியை, ருத்திராக்ஷத்தையணிபவரை நீதி அரசன் தேசத்திலிருக்கவொட்டாமல் துறத்திவிடுவது நீதியாமென்றும், "ஜபித்தல், வேள்வி செய்தல், வேதமோதுதல், பிதுர் பூஜை செய்தல், சந்தியாவந்தனஞ் செய்தல், பலதானஞ் செய்தல் முதலிய சத்கர்மானுஷ்டான காலங்களில் ஊர்த்துவபுண்ட்ரமணிந்து செய்வரேல் அது அந்தப் பலனைத் தருமென்றும், ஊர்த்துவபுண்ட்ரம் தரிக்காமற் செய்த அநுஷ்டானங்கள் பலனற்றனவாயொழியுமென்றும், சாஸ்திர விதிப்படி சிராத்தஞ்செய்த காலத்தில் சிராத்தான்

ணத்தை உண்பார்க்கும், உண்பிப்பார்க்கும் ஊர்த்துவபுண்ட்ரம் தரித்துக்கொள்வது விதியாகுமென்றும், இடையில் இரண்டுவிரல் அகலம் வெளியிட்டுப் பக்கங்களில் ஒவ்வோரகலங்கூட்டி நான்கு விரல் விசாலமுற நாசி முதல் கேசாந்தமாக ஊர்த்துவபுண்ட்ர மணிய வேண்டுமென்றும், இந்த இலக்கணமில்லாமல் அணிவது விதியன்றென்றும், இடையில் வெளியின்றித் தரிப்பது உத்தமர்க் கழகாகாதென்றும் பராசரசங்கிதை பகுத்துரையாநிற்கும்.

இரண்டு விரல் அகலம் இடைவெளியிட்டுப் பக்கங்களிரண்டும் ஓரோர்விரல் அகலமாகத் தரித்துக்கொள்வதுதான் விதியாகுமென்றும், இடைவெளியின்றி ஊர்த்துவ புண்ட்ரம் அணிபவன் பரமபதமடைய மாட்டானென்றும், திரிபுண்ட்ரத்தை வேடிக்கைக்காவது அணிந்துகொள்வது வேதியர்க்குத் தகாதென்றும், அப்படித் தரித்துவிடுவானாகில் அப்பொழுதே பதிதனுவானென்றும், மரீசி கூறிய ஸ்மிருதி செப்பாநிற்கும்.

தக்க அந்தணர் குலத்திற் பிறந்து, திரிபுண்டிரம் தரித்துச் சங்கரனை அர்ச்சிப்போர் அப்பொழுதே அதமர்களாய் விடுவார்கள்; இந்தத் திரிபுண்ட்ரம் தரித்தல் முதலிய ஆசாரங்கள் சூத்திரரையும், பதிதரையும் நோக்கி விதிக்கப்பட்டன என்று வாசிட்ட சங்கிதை வகுத்துரைக்கும்.

தானம் தவம் தென்புலத்தாரைக்குறித்து ஆகுதி செய்தல் முதலிய காலங்களில் ஊர்த்துவ

புண்ட்ரம் தரித்துக்கொண்டால் மாத்திரந்தான் அவை பலனைத்தரும். அதனைத்தரிக்காமல் செய் வார் நீசரைக்காட்டிலும் கடையராவார் என்றுப் அவர் தம்முகம் மசானத்திற்கு ஒப்பாகும் என்றுப் பார்க்கவஸ்மிருதி பகரும்.

பூணூலும், சிகையும், ஊர்த்துவபுண்ட் மில்லாதவனும், பவித்திர மணிந்துகொள்ளா கையையுடையவனும் செய்யும் நற்றரு மங்க ளெல்லாம் பயனின்றி யொழியுமென்று வேதத் தின் நுண்பொருளாய் விளங்குகின்ற விஷ்ணுஸ் மிருதி விரித்துரைக்கும்.

வேதபாராயணஞ் செய்கிற காலத்திலும் யாகஞ் செய்கிறபோதும், போஜனம் செய்கிற காலத்திலும், சுபகாரியங்கள் செய்கிற காலங்களி லும் பூத பிசாசுகள் அணுகாதிருக்க வேதியர்கள் ஊர்த்துவபுண்ட்ரம் தரிக்கத்தக்கது; என்று மனு தர்மசாஸ்திரம் விரித்துரைத்தது.

வேதியருக்கு ஊர்த்துவபுண்ட்ரமும் க்ஷத்திரி யருக்குப் பிறையின் கீற்றும், வணிகருக்கு வட்ட மும், சூத்திரருக்குத் திரிபுண்ட்ரமும் உரியன வாம்; பிராம்மணர்கள் மறந்தும் அந்தத் திரிபுண்ட்ரம் தரிக்கப்பெறார். உண்மையுடைய பெரியோர் ஆசரித்தல் அவருக்கியல்பன்று என்று ஆக்கினிய வேசிகிரி அறையாநின்றது.

சிறந்த வேதியர் குலத்திற் பிறந்து, அஸ்தி சஸ்திரங்களையும், வில்லையும் தரித்துக்கொண்

யுத்தஞ் செய்வதற்கு முன்வருகின்றவனும், பிறர் பொருளை யபகரித்து உண்பவனும், திரிபுண்ட்ரத்தைத் தரிப்பவனும் ஆகிய இவர்கள் அதமர்களாய் விடுவார்களென்று ஜியாபாலஸ்மிருதி எடுத்தியம்பும்.

வேதியர்கள் எந்தக்காலத்திலும் ஊர்த்துவ புண்ட்ரம் தரித்துக்கொள்வதே அவருக்கியல்பாகும். இந்த ஊர்த்துவபுண்ட்ரம் தரித்தவர்களை யமகிங்கரர்கள் கண்டால் பாம்பைக்கண்டதவளை போல அடங்குவார்கள்; என்று பிரமவிராத்திரி என்ற நூல் கூறும்.

"ஒருவன் ஊர்த்துவபுண்ட்ரத்தை இடைவெளியிட்டு அணிந்திடில் அந்த இடைவெளிதானே நமக்குச் சிறந்த ஆலயமாகும்; அந்த ஆலயத்தில் நாம் இலக்குமிதேவியோடு மகிழ்ந்து வசிக்கின்றோம்; அங்ஙனம் இடைவெளியின்றித் தரிப்பானாகில், அவன் என்னையும் ஸ்ரீதேவியையும் நிந்தித்தவனாவான்" என்று திருமால் பிரம்மதேவனுக்குச் செப்பிய பிர்மாண்ட புராணம் புகலாநிற்கும்.

பூமியில் பாஷண்டர்களைப் பார்ப்பதாலும், தொடுவதாலும், அவர்களோடுரையாடுவதாலும் உண்டாகின்ற பாதகமெல்லாம் ஊர்த்துவ புண்ட்ரதாரணத்தாற் கழிந்துவிடுமென்று பராசரஸ்மிருதியும், போதாயனமும், பிரமாண்ட

புராணமும் சந்தேகமறத் தெளிவாகஎடுத்தி யம்பும்.

ஊர்த்துவபுண்ட்ரம் தரிப்பதற்கு வெண்மை நிறமுடைய மண்ணே உரியதாகும். அங்ஙன மிருக்க, கங்காதீரத்திலுள்ளாரும்; மற்றுஞ் சிறந்த திவ்யதேயத்திலுள்ளவர்களும், தத்துவ வாதிய ரும், மாயாவாதியரும் எல்லாம் சிவந்த மிருத்திகை தரிப்பதற்குக்காரணம் யாதென்று ஆராய்ந்தால், அந்தச்சிவந்த மிருத்திகை, உடனே காமியபலங் களை யெல்லாம் கொடுக்குமென்றும், காமியபலத் தில் இச்சையின்றியிருப்பவருக்கு அது முக்தியை யளிக்குமென்றும் பலநூல்களும் கூறுகின்றன. ஆதலால் அந்த மிருத்திகையும் ஊர்த்துவபுண்ட் ரத்திற்கு விசேடமாகும் என்பது நன்கு விளங்கும்.



அறிவிற் பெரியீர் இனிப் பராசரபகவான் அருளியவாறு கூறுவேனுக.

ஆதாயவைஷ்ணவேக்ஷேத்ரே ம்ருத்திகாம் விமலாம்சுபாம் |
மூலமந்த்ரேணுபிமந்த்ர்யசோர்த்வபுண்ட்ராணிதாரயேத் | |
ல்லாடாதிஷுசாங்கேஷு கேசவாதீந்யதாக்ரமம் |

தா-ம். அந்த ம்ருத்திகையை எம்பெருமானு கந்தருளின ஸ்ரீரங்காதி திவ்யக்ஷேத்திரத்தில் நின்றும் ஸங்க்ரஹித்து, வெண்மையாய், ம்ருதி வாய், வாஸனையுடையதாம்படிசெய்து திருமந்த் ரத்திஞலபிமந்த்ரித்து, நெற்றி முதலான அவ யவங்களில் ஊர்த்வபுண்ட்ரமாகத்தரித்து அவை களில் கேசவாதி மூர்த்திகளை ஆவாஹநம் செய்ய வேண்டியது.

த்வ்யங்குலம் த்ர்யங்குலம்வாபி ஹ்யந்தராளம்ப்ரகல்ப
யேத் ||

பார்ச்வமங்குல மாத்ரம்ஸ்யா தூர்த்வபுண்ட்ரஸ்யல
க்ஷணம் |

தா-ம் இரண்டங்குலமாவது, மூன்றங்குல மாவது, இடையில் விட்டு, இரண்டு பக்கங்களில் ஒவ்வோரங்குலம் அகலமுடையதாய், (ஹரிபாதாக்ருதியாய் வெண்ம்ருத்திகையினால்) தரிக்கப்பட்டது ஊர்த்வபுண்ட்ரமென்று சொல்லப்படும்.

ஹரே: பாதாக்ருதிம்ரம்யம் ஸுபார்ஸ்வம்ஸுமனோ
ஹரம் ||

நாஸிகாமூலமாரப்ய லலாடாந்தஞ்சவிந்யஸேத் |

ஏவம்—ஸர்வாணிபுண்ட்ராணி ஸச்சித்ராண்யேவதார
யேத் ||

தா-ம். ஹரிபாதாக்ருதியாய், பஹுகுண ஸம்ருத்தமாய், மநஸ்ஸுக்கு ஆஹ்லாத ஜநகமான ஊர்த்வபுண்ட்ரத்தை நாஸிகாமூலமென்று சாஸ்த்ரங்களில் ஸித்தமான நாஸிகையின் மூன்றுவது பாகம் தொடங்கி நெற்றிக்கட்டு வரையில் அழகாகத் தரிக்கவேணும். இப்படியே ஹரிபாதாக்ருதியான மற்ற ஊர்த்வபுண்ட்ரங்களையும் இடையில் இடம் விட்டே தரிக்கவேணும்.

**இடைவெளியில்லாத ஊர்த்வபுண்ட்ரத்துக்கு நிஷேதம்.**

ப்ரமாணஹீநம்பத்தாக்ர மச்சித்ரஞ்சவிவர்ஜயேத் |

அச்சித்ரமூர்த்வபுண்ட்ரந்து ய:கரோதிவிமூடதீ: ||

தேநைவஹித்ருதஸ்ஸம்யக் சுந:பாதோநஸம்சய: |

தஸ்மாச்சித்ராந்விதம்புண்ட்ரம் ப்ராஹ்மணஸ்ஸததம்
தரேத் ||

தா-ம். கீழுதஹரித்த நீளம் அகலங்களில் குறைந்தாலும் அதிகரித்தாலும், நுனிசேர்ந்திருந்தாலும், இடையில் வெளியில்லாவிட்டாலும், அப்படிப்பட்ட புண்ட்ரத்தைத்தரிக்கக்கூடாது. ஊர்த்வபுண்ட்ரத்தின்ஸ்வருபமறியாதஒருமூடன் அந்தப் புண்ட்ரத்தைத் தரித்தானேயானல், அவன் நாயின்காலைத் தரித்தவனுவான்; இதில் ஸம்சயமில்லை. ஆயையால் இடைவெளியுள்ள ஊர்த்வ புண்ட்ரத்தையே ப்ராஹ்மணன் தரிக்கக்கடவன்.

### வைதீககர்மங்களில்ஊர்த்வபுண்ட்ரதாரணவிதி.

ஸந்த்யாகாலேஜபே—ஹோமே ஸ்வாத்யாயே-பித்ருதர்பணே |
ஸ்ராத்தே-தாநேச – யஜ்ஞேச தாரயே தூர்த்வபுண்ட்ரகம் ||

தா-ம். தினந்தோறும் த்ரிகாலத்திலும் அநுஷ்டிக்கவேண்டும் ஸந்த்யாவந்தநம், ஜபம், ஹோமம், வேதாத்யயநம், பர்வகாலங்களில் செய்யவேண்டும் பித்ருதர்ப்பணம், ஸ்ராத்தம், தாநம், ஒரு பலத்தை உத்தேசித்துச் செய்யும் யாகம், இவை முதலான நித்ய–நைமித்திக–காம்ய கர்மங்களை ஊர்த்வபுண்ட்ரம் தரித்தே அநுஷ்டிக்கவேணும்

### ஊர்த்வபுண்ட்ரமில்லாமல் செயத கர்மம் பலமின்றியொழிகை.

ஊர்த்வபுண்ட்ரந்து விப்ராணும் ஸந்த்யாநுஷ்டாநகர்மவத் |
ஸ்ராத்தகாலே—விசேஷேண கர்த்தா—போக்தாசநத்யஜேத் ||
ஊர்த்வபுண்டரவிஹீநஸ்து கர்மயத்கிஞ்சிதாசரேத் |
தத்ஸர்வம்விபலம்யாயா திஷ்டாபூர்த்தமபித்விஜா: ||

தா-ம். ப்ராஹ்மணனுக்கு ஸந்த்யாவந்தநம் போல் ஊர்த்வபுண்ட்ர தாரணம் ஆவஸ்யகம். அதிலும் ஸ்ராத்தகாலத்தில் ஸ்ராத்தத்தைப் பண்ணுகிறவனும், அதில் புஜிக்கிறவனும், ஊர்த்வபுண்ட்ரத்தை விடாமல் தரிக்கக்கடவன். ஊர்த்வபுண்ட்ரமில்லாதவன் செய்த நித்யநைமித்திக கர்மங்களும், யாகமும், குளம், கிணறு முதலானவைகளும் பலமின்றியே போய்விடும்.

### ஊர்த்வபுண்ட்ர சூந்யசரீரதர்சந நிஷேதம்.

யச்சரீரம்மநுஷ்யாணு மூர்த்வபுண்ட்ரவிவர்ஜிதம் |
த்ரஷ்டவ்யம்நைவ தத்காத்ரம் ஸ்மசாநஸத்ருசம் ஹிதத் ||

தா-ம். ஊர்த்வபுண்ட்ரமில்லாத சரீரம்ஸ்மசாநதுல்யமாகையால் அதைப் பார்க்கவேகூடாது.

### ஊர்த்வபுண்ட்ர தாரணபலம்.

ம்ருதமாதாயக்ருஷ்ணுயா ஸ்துலஸ்யாமூலஸம்பவாம் |
தாரயேதூர்த்வபுண்ட்ராணி தஸ்யா:பலமநந்தகம் ||
யத்துதிவ்யம்ஹரே:க்ஷேத்ரம் ம்ருதமாதாயதத்ரவை |
தாரயேதூர்த்வபுண்ட்ராணி த்ரிஸந்த்யாஸு த்விஜோத்தமா: ||

தா-ம். ப்ராஹ்மணோத்தமர்களே! க்ருஷ்ண துளஸியின் மூலத்திலிருக்கும் ம்ருத்துவிணுலாவது, ஸ்ரீரங்காதிபகவத்க்ஷேத்ரத்தின் ம்ருத்துவிணுலாவது, உதயம், மத்யாஹ்நம், ஸாயங்காலம், ஆகிற மூன்று ஸந்த்யாகாலங்களிலும் ஊர்த்துவபுண்ட்ரத்தைத் தரித்தால் அநந்தமான பலத்தை படையக்கடவன்.

## வேறுவிதமான புண்ட்ரங்களைத் தரித்தால் சூத்ரனாதல்.

அச்சித்ரமூர்த்வபுண்ட்ரம்வா த்ரிபுண்ட்ரம்யஸ்து
தாரயேத் |
ஸஜீவந்நேவசூத்ரத்வ மாசுகச்சத்யஸம்சயம் | |

தா-ம். இடைவெளியில்லாத ஊர்த்வபுண்ட்ரத்தையாவது, திர்யக் புண்ட்ரத்தையாவது எவனொருவன் தரிக்கிறானோ? அவன் இந்த ஜந்மத்திலேயே வைதிக கர்மங்களுக்கு யோக்யதை யில்லாத சூத்ரனாயே சீக்கிரத்திலாய் விடுவன். இது நிச்சயம்.

## த்ரிபுண்ட்ரதாரியோடு ஸஹவாஸநிஷேதம்.

கபாலதேஹபஸ்மாஸ்தி சுக்திபாஷாண தாரிணம் |
த்ரிபுண்ட்ரதாரிணம்விப்ரம் சண்டாளமிவஸந்த்ய
ஜேத் | |

தா-ம். மண்டையோடு, உடலின் சாம்பல், எலும்பு, சங்கு, லிங்கமென்று கட்டிக்கொள்ளும் கல்லு, இவைகளையாவது, த்ரிபுண்ட்ரத்தையாவது எவன் தரிக்கிறானோ? அவனை ஸஹவாஸ ஸம்பாஷணங்களுக்கு யோக்யதையில்லாத சண்டாளனைப்போல் தூரத்தில் விலக்கவேண்டியது.

## த்ரிபுண்ட்ரதாரிக்கு ராஜ்யத்தில் நிஷேதம்.

அக்நிதம்கரதஞ்சைவ லிங்கபாஷாண தாரிணம் |
திர்யக்புண்ட்ரதரம்விப்ரம் ராஜாராஷ்ட்ராத்ப்ரவாஸ
யேத் | |

தா-ம். வீட்டில் நெருப்பு வைக்கிறவன், அந்நாதிகளில் விஷத்தை யிடுகிறவன், லிங்கதாரி

ஆன இப்படிப்பட்ட ப்ராஹ்மணர்களை ராஜா தன் ராஜ்யத்துக்கு வெளியில் துறத்திவிடக் கடவன்.

## த்ரிபுண்ட்ரதாரிக்கு கோஷ்டியில் நிஷேதம்.

திர்யக்புண்ட்ரதரோவிப்ர: பங்க்திமத்யேஸ்திதோயதி |
ஸாபங்க்திர்ப்ரஹ்மஹத்யாயாம் யுஜ்யதேநாத்ரஸம்சய: ||
திர்யக்புண்ட்ரதரோவிப்ரோ யத்ரதிஷ்டதிதுர்மதி: |
ஸதேச:பாபஸம்பூதி ச்ச்மசாநஸத்ருசோபவேத் ||

தா-ம். த்ரிபுண்ட்ரதாரியான ப்ராஹ்மணனோடுகூட ஒருவரிசையில் நின்றவர்கள் ப்ரஹ்மஹத்யாதி பாபத்தை யடைவார்கள். ஸ்வதர்மத்தைவிட்டு, துர்புத்தியுடையனாய் த்ரிபுண்ட்ரத்தைத் தரித்தவன் வஸிக்கும் தேசம் பாபிஷ்டமாய் ஸ்மசாநம்போல் அசுசியாயிருக்கும்.

## த்ரிபுண்ட்ரதாரிக்குத் தண்டம்.

ப்ராஹ்மண:குலஜோவித்வாந் திர்யக்புண்ட்ரதரோயதி |
தம்கர்த்தபம்ஸமாரோப்ய ராஜாராஷ்ட்ராத்ப்ரவாஸயேத் ||

தா-ம். ப்ராஹ்மணஜாதியில் அதிலும் ஸதாசாரமுள்ள குலத்தில் பிறந்து வேதசாஸ்த்ரங்களை யதிகரித்தவன் திர்யக்புண்ட்ரத்தைத் தரித்தால், ராஜா அவனைக் கழுதைமேலேற்றித் தேசத்துக்கு வெளியில் விட்டுவிட வேண்டியது.

தஸ்மாத்துப்ராஹ்மணோநித்ய மூர்த்வபுண்ட்ரம் ஹிதாரயேத் |
ஊர்த்வபுண்ட்ரேணஸம்ஸித்திம் லபதேநாத்ரஸம்சய: ||

தா-ம். ஆகையால் ப்ராஹ்மணன் எப்போதும் ஊர்த்வபுண்ட்ரத்தையே தரிக்கக் கடவன் அதனுல் ஸமஸ்தமான கர்மம், மந்த்ரம், தந்த்ரம் இவை முதலானவைகள் ஸித்தித்துப் பலத்தைக் கொடுக்கும். இதிலொரு ஸம்சயமும் கிடையாது

**ஊர்த்வபுண்ட்ரங்களின் ஸ்தாநமும், ஸ்தாநங்களுக்குத் தக்க ப்ரமாணமும், தேவதையும்.**

ஊர்த்வபுண்ட்ரப்ரமாணுநி ஸ்தாநாநிமுநிஸத்தமா: ! |
வ்யூஹபேதேநநாமாநி வக்ஷ்யாமிசப்ருதக்ப்ருதக் ' |

தா-ம். இப்படி ஸலக்ஷணமான ஊர்த்வ புண்ட்ரத்தின் மாஹாத்ம்யத்தையும், இதர புண்ட்ரங்களின் நிக்ருஷ்டதையையும் சொன்னேன். இனி அதின் ப்ரமாணத்தையும், இடங்களேயும் அவைகளில் ஆவாஹநம் செய்யவேண்டும் திருநாமங்களேயும் சொல்லப்போகிறேன். ருஷிகளே! கேளுங்கள்.

சதுஸ்த்ரித்வ்யங்குலம்வாபி விஸ்தாரம்பரிகல்பயேத் ! |

தா-ம். நாலு அங்குலமாவது, மூன்று அங்குலமாவது, இரண்டு அங்குலமாவது, அந்தந்த இடங்களுக்குத் தக்கபடி அகலமுள்ளதாக ஊர்த்வபுண்ட்ரத்தைத் தரிக்கவேண்டியது.

லலாடேகேசவாயேதி சதுரங்குலமாயதம் ! |
சதுஸ்சக்ரதரந்தேவம் சுத்தஜாம்பூநதப்ரபம் |

தா-ம். முகத்தில் நாலு அங்குலம் உயரமுள்ள ஊர்த்வபுண்ட்ரத்தைத் தரித்து, அதில் நாலு சக்கரங்களேயுடையனுய் அழுக்கெடுத்த தங்கம்போல் காந்தியையுடையனுன கேசவனேக்கேச

வாய நம: என்கிற மந்த்ரத்திஞல் ஆவாஹநம் பண்ணவேண்டியது. அந்த ஊர்த்வபுண்ட்ரத்துக்கும் கேசவன் என்றே திருநாமம்; மற்ற ஊர்த்வபுண்ட்ரங்களிலும் இப்படியே ஊஹித்துக் கொள்ள வேண்டியது.

நாபௌநாராயணேயேதி தாரயேத்துதசாங்குலம் |
சதுச்சங்கதரந்தேவம் நீலஜீமூதஸந்நிபம் |

தா-ம். கொப்பூழின் மேலே நடு உதரத்தில், நாலு சங்கங்களேயும், நீலமேகம்போன்ற காந்தியையுமுடைய நாராயணனே நாராயணுய நம: என்னும் மந்த்ரத்திஞல் பத்து அங்குல ப்ரமாணம் தரிக்கவேணும்.

ஹ்ருதயேமாதவாயேதி ந்யஸேதஷ்டாங்குலந்ததா ||
சதுர்க்கதாதரந்தேவ மிந்தீவரதளப்ரபம் |

தா-ம். மார்பில், கருநெய்தல்போன்ற காந்தியையும், நாலு கதைகளேயுமுடைய மாதவனே மாதவாய நம: என்னும் மந்த்ரத்தைச் சொல்லி எட்டங்குல ப்ரமாணம் தரிக்கவும்.

கோவிந்தாயேதிகண்டேச தாரயேச்சதுரங்குலம் |
சதுர்த்தநுர்த்தரந்தேவம் கோடிசந்த்ரஸமப்ரபம் ||

தா-ம். கோடி சந்த்ரனுக்கு ஸமாநமான ஒளியையும், நாலு தநுஸ்ஸுகளேயுமுடைய கோவிந்தனேக் கோவிந்தாய நம: என்னும் மந்த்ரத்தைச் சொல்லி, நாலங்குல ப்ரமாணம் கழுத்தில் தரிக்கவும்.

விஷ்ணுஞ்சதக்ஷிணே குக்ஷௌதாரயேத்துதசாங்குலம் ||
சதுர்ஹலதரந்தேவம் பத்மகிஞ்சல்கஸந்நிபம் |

தா-ம். தாமரைப்பூவின் தாதுபோன்ற வர்ணத்தையும், நாலு கலப்பைகளையுமுடைய ஸ்ரீ விஷ்ணுவை விஷ்ணவே நம: என்னும் மந்த்ரத்தைச் சொல்லிப் பத்தங்குல ப்ரமாணம் வயிற்றின் வலது பக்கத்தில் தரிக்கவும்

மதுஸூதநம்பாஹுமத்யே ப்யஸேதஷ்டாங்குலந்ததா ||
சதுர்முஸலப்ருத்தேவ மரவிந்தாபமேவச ||

தா-ம். தாமரைப் பூப்போன்ற காந்தியையும், நாலு உலக்கைகளையுமுடைய மதுஸூதநனை மதுஸூதநாய நம: என்னும் மந்த்ரத்தை யநுஸந்தித்து எட்டங்குல ப்ரமாணம் வலது புஜத்தில் தரிக்கவும்.

த்ரிவிக்ரமாயேதிசாம்ஸே தாரயேச்சதுரங்குலம் ||
சது:கட்கதரந்தேவம் ஜ்வலதக்நிஸமப்ரபம் |

தா-ம். ஜ்வலித்துக்கொண்டிருக்கிற அக்நியோடொத்த தேஜஸ்ஸையும், நாலு கத்திகளையுமுடைய த்ரிவிக்ரமனை த்ரிவிக்ரமாய நம: என்னும் மந்த்ரத்தை யநுஸந்தித்து நாலங்குல ப்ரமாணம் வலது தோளில் தரிக்கவும்.

வாமநம்வாமகுக்ஷௌது தாரயேத்துதசாங்குலம் ||
சதுர்வஜ்ரதரந்தேவம் தருணாதித்யஸந்நிபம்

தா-ம். மத்யாஹ்நத்து ஸூர்யன் போன்ற ஒளியையும், நாலு வஜ்ராயுதங்களையுமுடைய வாமநனை வாமநாய நம: என்னும் மந்த்ரத்தை யநுஸந்தித்துப் பத்தங்குல ப்ரமாணம் வயிற்றினிடதுபாகத்தில் தரிக்கவும்.

ஸ்ரீதரம்பாஹுமத்யேது ந்யஸேதஷ்டாங்குலந்ததா ||
பட்டஸாயுதப்ருத்தேவம் புண்டரீகாபமேவச |

தா-ம். புண்டரீகஸமாந வர்ணத்தையும், நாலு பட்டஸாயுதங்களையுமுடைய ஸ்ரீதரனை ஸ்ரீதராய நம: என்னும் மந்த்ரத்தைச் சொல்லி எட்டங்குல ப்ரமாணம் இடது புஜத்தில் தரிக்கவும்.

ஹ்ருஷீகேசந்துவாமாம்ஸே தாரயேச்சதுரங்குலம் ||
சதுர்முத்கரப்ருத்தேவம் வித்யுத்கணஸமப்ரபம் |

தா-ம். மின்னலுக்கு ஸமாநமான தேஜஸ்ஸையும், நாலு உழல் தடிகளையுமுடைய ஹ்ருஷீகேசனை ஹ்ருஷீகேசாய நம: என்னும் மந்த்ரத்தையநுஸந்தித்து நாலங்குல ப்ரமாணம் இடது தோளில் தரிக்கவும்.

ப்ருஷ்டேதுபத்மநாபேதி தாரயேச்சதுரங்குலம் ||
ஸர்வாயுததரந்தேவம் கோடிஸூர்யஸமப்ரபம்

தா-ம். கோடி ஸூர்யர்களுக்கு ஸமாநமான காந்தியையும், ஸமஸ்தமான ஆயுதங்களையுமுடைய பத்மநாபனை பத்மநாபாய நம: என்னும் மந்த்ரத்தை யுச்சரித்து நாலங்குல ப்ரமாணம் முதுகில் தரிக்கவும்.

ககுதேதாமோதரேதி தாரயேச்சதுரங்குலம் ||
சதுஷ்பாசதரந்தேவ மிந்த்ரகோபஸமப்ரபம் |

தா-ம். பட்டுப்பூச்சிக்கு ஸமாநமான நிறத்தையும், நாலு பாசாயுதங்களையுமுடைய தாமோ

தரிக்கத் தாமோதராய நம: என்னும் மந்த்ரத்தை யநுஸந்தித்து நாலங்குல ப்ரமாணம் கழுத்துப் பிடரில் தரிக்கவும்.

நமோஸ்துவாஸுதேவாய மூர்த்நிசைவந்த்ரயோதசம் ||

தா-ம். இப்படித் தரித்து மிகுந்த திருமண் காப்பை வாஸுதேவாய நம: என்னும் மந்த்ரத்தினுல் சிரஸ்ஸில் தரிக்கவும் ||

### ஊர்த்வபுண்ட்ரம் தரித்த சரீரத்தின் பெருமை.

தாரணதூர்த்வபுண்ட்ரஸ்ய சரீரம்மந்திரம்ஹரே:||
தஸ்மாத்துஸததம்தார்ய மூர்த்வபுண்ட்ரம்த்விஜோத்தமை:||

தா-ம். பன்னிரண்டு திருநாமங்களையுடைய இந்த ஊர்த்வபுண்ட்ரங்கள் எந்தச் சரீரத்தில் தரிக்கப்படுகிறதோ; அந்தச் சரீரம் ஸர்வேஸ்வரனுக்குக் கோயிலாயிருக்கும். ஆகையால் ப்ராஹ்மணர் முதலானவர்கள் ஸர்வகாலமும் ஊர்த்வபுண்ட்ரங்களை யணியக்கடவர்கள்.

### அதில்லையாகில் அவத்யம்.

ஊர்த்வபுண்ட்ரம்விநாயஸ்து ஸந்த்யாகர்மாதிகஞ்சரேத் |
தத்ஸர்வம்ராக்ஷஸைர்நீதம் ஜபஹோமாதிகந்ததா||

தா-ம். ஊர்த்வபுண்ட்ரதாரணம் செய்து கொள்ளாமல் ஸந்த்யாவந்தநம், மந்த்ரஜபம், நித்ய நைமித்திகமான ஹோமம் இது முதலான எந்தக் கர்மங்களை யநுஷ்டித்தாலும் அவைகளை ராக்ஷ

ஸர்கள் கொண்டுபோவார்கள். என்றால், அவை களால் தேவர்கள் த்ருப்தியடையார்கள்; இவனுக்குப் பலத்தையுங் கொடார்கள்; அவைகள் நிஷ்பலங்களாய் விடும் என்பதாம்.

தேசவா·பு நஷாலோகே யேஷாம்ஹ்ருதிகேசவா: |
கேசவா·ப்பிதசித்தாயே நசவாநபுநர்ப்பவா:||

தா-ம். உலகத்தில் பிணங்களென்று சொல்லப்பட்டவர்கள் யாரெனில்; எவர்களுடைய ஹ்ருதயத்தில் ஸ்ரிய:பதிவஸிக்கவில்லையோ? அவர்களே பிணம்போல்பவர்கள்; அவர்கள் ஒரு கார்யத்துக்கும் உபயோகமின்றி அபரிசுத்தராயிருப்பர்கள். எவர்கள் ஹ்ருதயத்தில் ஸர்வகாலமும் பகவான் வஸிக்கிறானோ? அவர்களுடைய ஜங்மம் ஸபலமாகையால் அவர்கள் பிணமாகச் சொல்லப்படமாட்டார்கள்; இவ்வுலகத்தில் மறுஜங்மத்தையுமடையார்கள்.

---

# திருச்சூர்ணக் காப்பு வசனம்

திருமால் திருவடித் திருமண் திருக்காப்பணிவோர்க்கெல்லாம் தாங்களணியும் நாமங்களின் நடுவில் இலக்குமியாகிய அன்னையின் அடையாளமாயும். அழகுதருவதாயும் உண்மையால் இத்திருச்சூர்ணக்காப்பும் நடுவிடம்பெற்றது. இதை அணிவோரும் இரு வகைப்படுவார். ஒருகூட்டத்தார்மஞ்சட்பொடியை நடுக்காப்பாய் இலக்குமி

யின் அடையாளமாய் அணிகிறுர்கள். மற்ருெரு வகுப்பினர் சிவப்புநிறமுள்ள திருச்சூர்ணத் தையே நடுக்காப்பாய் அணிகிறுர்கள்.

இருவகையாரும் தாங்களணியுஞ் சூர்ணமே வைதீகமென்றும், மற்றது அவைதீகமென்றும் கூறுவர். மஞ்சட்பொடி அணிபவர் இதுஎல்லாவை தீக லௌகீககாலங்களிலும் மங்களத்தைக்குறிக் கும், வெற்றிலை, பாக்கு, சூடன், சாம்பிராணி, சர்க் கரை, புஷ்பம், தீபம், வாழை, மாவிலை, பால், காம தேனு, பழம், எலுமிச்சம் பழம், கன்யாப்பெண் கள், சுமங்கலிகள், யானை இவற்றினும் மேலான தென்றும், புதுவஸ்திரம், புதுச்சீரை, புதுக்கணக்கு முதலிய லௌகீக வைதீகத்தினும் உபயோகப்படு கிறது என்றும் இதுஇல்லையேல் மங்கள காரியம் இல்லையென்றும், நோய்களைப் போக்கவும், ஆகார பதார்த்தங்களில்விசேடமாய்இதுசேர்க்கப்படுகிற தென்றும், பெண்கள் தினமும் அணிந்து, குளித் துச்சருமநோயைப்போக்க உபயோகப்படுகிற தென்றும், ஸ்வாமிக்கும் திருமஞ்சனகாலத்தில் உப யோகப்படுகின்றதென்றும், பலகூறுவர். மஞ்சள் சூர்ணம்முற்கூறியபெருமையுடையதே. அதைம றுக்கவுமில்லை; வெறுக்கவுமில்லை. ஆனுல்முற்கூ றியமங்கள அடையாளங்களிற்சிறந்ததே மஞ்சள். அன்றிக் காப்பாற்றும் அன்னையாகிய இலக்குமி யின்வண்ணம் மஞ்சள்நிறமில்லை. ஆதலால் செந் நிறவண்ணத்தானை அந்நிறவண்ணத்தோடே ஆத ரிக்கவேண்டும், அன்றேல் நமது வழிபாடு அன்னை யாகிய இலக்குமியைச் சேராது. பொய்த்தலையை ஒட்டித் தபால் அனுப்பினுல் குறித்த இடத்

திற்கு நிச்சயமாய்ப் போகாது. அதுபோல நமது வழிபாடும் போய்ச் சேராது. ஆதலால் செந்நிற வண்ணத்தானைச் செந்நிறச்சூர்ணத்தால் யாவரும் அருச்சனை செய்கிறார்கள். இது புராதனவழக்கன்றோ. சிவன்கோவிலிலும் கருநிற அம்பிகையைச் சிவப்பு நிறமுள்ள குங்குமத் தால் அருச்சிக்கிறார்கள். இது முக்காலும் உண் மையன்றோ வேதத்தில் ஸ்ரீசூக்தியும் சிகப்பு நிறத்தோடு செந்தாமரையாள் உள்ளாள் என்று இலக்குமியைப் போற்றுகிறது. நமது இடது இரத்தாசயத்திலிருந்து மார்பகத்து 72000நரம்பின் வழிச்சென்று நம்மைக் காப்பாற்றுஞ் சக்தி சிகப்பு நிறமுடையதல்லவா? இதன் உண்மையை திருப் பாற் கடல் கடைந்த காதையிலும் லக்ஷ்மி கடலில் செந்தாமரையிற் பிறந்து செங்கண் மால் மார்பகத்துள்ளாள் என்று கூறுமாற்றால் செந்நிற முடையாள் இலக்குமி என்பதை யார் மறுக்கமுடியும்

இவ்வுண்மையை யோகிகளும், உடற்கூறு அறிவாரும் நன்கு அறிவர். பலகூறிப்பயனென்? முதலையும், மூர்க்கனும் கொண்டது விடா என் பர். ஆனால் இச்சாத்விகப்பற்றற்ற இவர்களி டைஇவ்வாறு வேறுபாடுவருவது கலிகாலக் கொடுமையேயாம். எல்லீரும் வீடுபெற்றால் உல கில்லையன்றோ? எம்பெருமான் திருவுள்ளமேல் யாரேவிலக்குவார். திருமண் காப்பணிவதிலும், ஸ்ரீவைஷ்ணவ மதத்திற்குத் தலையான பரமா சார்யர்கள் அவதரித்த குருகூரிலும், ஸ்ரீபெரும் பூதூரிலும் தென்னாசாரியார் சம்பிரதாயமேயன்றி

வடவாரியர் சம்பிரதாயம் சிறிதும் காணவில்லை யே? இராமானுஜருடைய ஆசார்யர்களில் ஒருவ ராவது வடகலை சம்பிரதாய முடையவராக இல்லையே? இதுகொண்டுமன்றோ லண்டனில் பிரிட்டிஷ் பார்லி மெண்டும், இந்தியாவிலுள்ள விஷ்ணு தலங்களெல்லாம் தென்கலை யாசரணை யின் படியே இருந்திருக்கிற தென்பதை உயர்ந்த திவ்விய தேச ரிக்கார்டுகளிலும், சிலா சாசனங்களிலும் காணக்கிடக்கிற தென்றும் ஆங்காங்கே திவ்விய தேசங்களிலெல்லாம் தென் ஞசாரிய ...சம்பிரதாயமே அனுஷ்டானத்திலும் இருக்கிறதென்றும், சில கோயில்கள் பிற்காலத் தில் வடகலையாரால் ஆக்கிரமிக்கப்பட்டுள்ள தென்றும் உலகறிய (ஜட்ஜுமெண்டு)த் தீர்மா னித்தது உலகறியும். ஆதலால் அறிவுடைய தென்ஞசாரியர்களையும், அத்தாணிச் சேவகம் பெற்ற அர்ச்சகர்களையும் அடிபடிந்து வேண்டுவது அவசியம். இவர்கள் மற்ற வர்களுக்கு வழிகாட்டியாய்ப் பன்னிரு நாமத் தோடு தினமும் சேவை தந்து மற்றவர்களைத் திருத்துமாறு வேண்டிக்கொள்கிறேன். இக் காப்பைத் தஞ்சமென்றுணராதார்க்கு அதிகாரி கள் நிர்ப்பந்தப்படுத்தும் போதுதான் தெரியும் போலும். அது கூடிய சீக்கிரம் வரும் என்பதை ஞாபகப்படுத்தி, அர்த்த பஞ்சக தத்துவ மறிந்து, பஞ்சசம்ஸ்காரமும் செய்துகொண்டு ஆகாரத் திரய சம்பந்நராய்ச் சிகை, எக்யோபவீதம் ஊர்த்துவபுண்ட்ரம் தாமரைமணிமாலை, துளசி மணிமாலை, திருப்பவித்திரமாலை, இவைகளோடு வெண்மையான வஸ்திரம் தரித்த மகாபாகவதா

களான ஸ்ரீவைஷ்ணவர் பொன்னடியைப் போற்றி இக் காப்பை முடிக்கிறேன். யாவரும் இக்காப் பறிந்து எம்பெருமான் திருவடித் தாமரைத் தொண்டராகுக.

பாகவதர் பெருமையைப் பராசரர் கூறுமாறு;

அர்த்த பஞ்சக தத்வக்யா; பஞ்சசம்ஸ்கார ஸம்ஸ்கிருதா;
ஆகாரத்திரய சம்பந்நா மகாபாகவதாஸ்மிருதா; சிகா
எக்யோபவீதம் ஊர்த்துவபுண்ட்ரம் ததைவச
பத்மாக்ஷமாலாம் கௌசேயம் தாரயேத் சததம் திவிஜ:

மங்களம். மங்களம். மங்களம்.

